# செங்கதிர்த் துதி

(ஆதித்ய ஹ்ருதயம்)



மொழி பெயர்ப்பு:

வித்தியாரத்தினம், கவிதாரத்தினம், பாஷணகேசரி.

திருமதி. ஹா. கி. வாலம் அம்மையார்

பிரசுரம்:

தெய்விக வாழ்க்கைச் சங்கம்,

காஞ்சீபுரம்.

1966 பிப்பிரவரித் திங்கள்.

ஓம்

ஸ்ரீயபதியான பகவான் கிருபையால் பத்தர் அனைவரும் ஆற்றலும், ஆயுளும், நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமும் பெற்றுப் பல்லாண்டு பல்லாண்டு வாழ வேண்டும்!

பத்தி பெருகட்டும்!

வாழ்க பத்தர்கள்! வாழ்க வாழ்கவே!!



"ஞாயிறு போற்றுதும்!
ஞாயிறு போற்றுதும்!!"

— இளங்கோவடிகள்

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு."

"ஓவற இமைக்கும் சேண்விளக்கு அவிரொளி"

— நக்கீரர்

ஓம்

# செங்கதிர்த் துதி

("ஆதித்ய ஹ்ருதயத்தின்" 'தமிழ் மொழி பெயர்ப்பு.)



"நீயே யுலகெலாம் நின்னருளே நிற்பனவும்,"
நீயே தவத்தேவ தேவனும் — நீயே
எரிசுடரும், மால்வரையும், எண்டிசையும், அண்டத்
திருசுடரு மாய இவை."

—திருமழிசைப் பிரான்



ஓம்

# முகவுரை

வான அரங்கத்தில் வலம் வந்து வண்ணக் கதிர்கள் விரித்து ஒளிமழை பொழியும் சூரியன் வேத காலத்தி லேயே தனிப் பேரியற்கைத் தெய்வமாக வழிபடப் பட்டிருக்கின்றான். வேதங்கள் சூரிய தேவனின் வண்ண வடிவையும், மங்கல இயல்புகளையும் வியந்து போற்றுகின்றன. சம்ஹிதை நூல்களும் உபநிடதங் கள் பலவும் அருணனும் திருமாலும் ஆன 'சூரிய நாராயண' வடிவைக் குறிப்பிட்டுப் போற்றுகின்றன. சூரிய நாராயணன் என்னும் ஒளித்தேவனும் திருமாலும் ஒன்றேயான அம்சம் பண்டைய நாளி லிருந்தே பலரையும் கவர்ந்த அருட்கோலமாய் விளங்கி வந்திருக்கிறது.

திருமாலே ஒளி வீசி மன்னுயிர்களுக்கு வாழ்வு தரும் சூரியனாய் வான மண்டலத்தில் விளங்குகிறார் என்ற கருத்து மிகப் பழைமையானது. கீதைப் பேருரையில் கண்ணன் "பன்னிரண்டு ஆதித்யர்களுள் நானே சிறந்தவன்; நானே சூரியன்!" என்று முழங்கியது இங்கு நினைவுகூரத்தக்கது. சூரிய தேவனின் விஷ்ணு அம்சம் பல நூல்களில் விவரிக்கப் பட்டிருக்கிறது.

அருணனும், விஷ்ணுவும் ஒரே இறைவனே என்ற கருத்தைக் 'காயத்திரி மந்திரம்' புலப்படுத்து கிறது. சூரிய தேவன் முப்பெருந்தேவர்களான பிரமன், விஷ்ணு, சிவன் ஆகியோர்களின் ஒரே வடிவமே என்கிறது காயத்திரி மந்திரம்.

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

சூரியனைப் போற்றும் பக்தி இலக்கியங்களுள் ராமாயணத்தின் ஓர் பகுதியான 'ஆதித்ய ஹ்ருதயம்' முக்கியமானதாகும். இந்தத்துதியைப் பாடி, அருணனின் திருவருள் பெற்றே இராமபிரான், அரக்கர் கொற்றவன் இராவணனை வென்றார் என்பது பலரும் அறிந்தது.

சூரியபகவான், கண் கண்ட தெய்வமாகவும், பெரிய பொருளாகவும், சுயஞ்சோதியாகவும், சர்வ சத்திமானாகவும் தரிசனம் தருவதோடு, நோய் தீர்க்கும் இயல்பையுடையவனாயும் இருந்து வருகிறான். உலகுக்கெல்லாம் ஒளியூட்டி, நோய்களை நீக்கி மன்னுயிர்களுக்கு மங்கல வாழ்வு நல்கும் ஒளித் தேவனை,

"ஒன்றென உலகிடை உலாவு மீமிசை
நின்றுநின்று உயிர்தொறும் நெடிது காக்குமே."

என்று கம்பநாட்டாழ்வார் பாடிப் பரவியுள்ளார்.

மக்கள் அனைவரும் நித்திய வாழ்க்கையில் சகல பாக்கியங்களும் பெற, சூரியபகவானைத் தினமும் தரிசிக்க வேண்டும். தரிசனம் செய்யும் போது பாராயணம் செய்வதற்குத் துதி அவசியமாதலால், 'ஆதித்ய ஹ்ருதயம்' என்னும் துதி 'செங்கதிர்த்துதி' என்று தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கிறது. இத் துதியைப் பூரண நம்பிக்கையுடன் ஒரே சமயத்தில் மூன்று தடவை பாராயணம் செய்வோர், தினசரி வாழ்க்கையில் நிம்மதி பெறுவர் என்பது நிச்சயம்.

பம்பாய்,
20—2—66

ஹா. கி. வாலம்.

ஓம்

# செங்கதிர்த் துதி





யார் நம் அறிவைத் தூண்டுகிருரோ, அந்தச் சுடர்க் கடவுளின் மேலான ஒளியைத் தியானிப்போமாக.

—சூரிய காயத்திரி.

*

சீலமாய் வாழச் சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி !
சூரியா! போற்றி! சுந்தரா! போற்றி!
வீரியா! போற்றி! வினைகளைக் களைவாய்.

—நவக்கிரக தோத்திரம்.

ஸ்ரீ:



ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்ய பிரதிவாதி பயங்கரம்

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஸ்ரீபாடர்,
காஞ்சீபுரம்.

முகாம் மேலமாம்பலம், தேதி 19-3-66.
சென்னை-33.

முத்திரை

நம் முன்னோர்கள் 'आरोग्यं भास्करादिच्छेत्' [ஆரோக்யத்தை ஸூர்யபகவானிடமிருந்து அடைய வேண்டும்] என்னும் ப்ரமாணத்தை அனுஸரித்து உலகுக்கெல்லாம் ஒளியூட்டி நோய்களை நீக்கியருளும் கண்கண்டதெய்வமான ஸூர்யபகவானை ஆராதித்து நோயற்ற வாழ்க்கையையும் நீண்ட ஆயுளையும் பெற்று வாழ்ந்தார்கள்.

தன் அனுஷ்டானத்தின்மூலம் தர்மங்களை ப்ரசாரம்செய்ய ஏற்பட்ட பகவதவதாரமான ஸ்ரீ ராமசந்திர மூர்த்தி அகஸ்திய முனிவரால் உபதேசிக்கப்பட்ட ஆதித்ய ஹ்ருதயம் என்னும் ஸ்தோத்ரத்தை ஜபித்து ஸூர்யபகவானின் அருளைப்பெற்றுதான் உலக கண்டகனுன ராவணனை ஸம்ஹரித்தார் என்பது ராமாயணத்தில் ப்ரஸித்தம்.

இத்தகைய மஹிமைவாய்ந்த ஆதித்ய ஹ்ருதயத்தின் பொருளை தமிழ்மட்டுமறிந்த பக்தர்கள் உணர்ந்து பகவானை துதிப்பதற்கு அனுகுணமாக, பஜகோவிந்தம் முதலிய நூல்களின் தமிழ்ச் செய்யுளாக்க ஆசிரியையான ஸ்ரீமதி ஹா. கி. வாலம்மாள் அவர்களைக்கொண்டு இந்நூலை தமிழ்ச் செய்யுள் ரூபமாக மொழிபெயர்க்கச் செய்து காஞ்சிபுரம் தெய்விக வாழ்க்கைச் சங்கத்தினர் வெளியிடுவதை அறிந்து ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தில் மகிழ்ச்சி யடைகிருர்கள்.

தமிழறிந்த பக்தர்கள் இந்நூலின்மூலம் ஸூர்ய பகவானை துதித்து நோயற்றவாழ்வு முதலிய எல்லா மங்களங்களையும் அடையும்படி ஸ்ரீ மஹாஸந்நிதானத்தில் அனுக்ரஹிக்கிருர்கள்.

ஆக்ஞைப்படி,
M. V. கிருஷ்ணமூர்த்தி அய்யர்,
மானேஜர்.

ஸ்ரீ:

# மதிப்புரை

செங்கதிர்த் துதிக்கு நான் மதிப்புரை எழுதுவது "கதிரவனுக்குத் திருவிளக்கு" காட்டுவது போன்றதேயாம். ஸ்ரீமதி ஹா. கி. வாலம் அம்மாள் அவர்களைக் கொண்டு ஆதித்ய ஹ்ருதயத்தைத் தமிழ்ச் செய்யுள் மூலமாக மொழிப் பெயர்ப்பை மும்முறை படித்தேன். பக்கம் 11ல் "மும்முறை முதல்வன் அங்கை நீர் குடித்துத்" என்றுப் போலே நானும் மும்முறை யருந்தினேன் துதியமுதத்தை. ஆனந்தக் கடல் அலையெறிகின்றது. போதக் கடல் பொங்குகின்றது. உண்மையில் மதிப்பற்ற நூலுக்கு இவ்வளவே போதும் மதிப்புரை.

ஸ்ரீ ஜகதாசாரிய
**P. B. அண்ணங்கராசாரியார்,**
25–3–'66
சின்ன காஞ்சிபுரம்.

ஓம்:

# நாமாவளி

*

| | | |
|---|---|---|
| ஓம் | அருணாய | நம |
| ,, | ஆதித்யாய | ,, |
| ,, | இநாய | ,, |
| ,, | விஸ்வரூபாய | ,, |
| ,, | வாஸுதேவாய | ,, |
| ,, | ஹ்ருஷிகேஸாய | ,, |
| ,, | காந்திதாய | ,, |
| ,, | கநாய | ,, |
| ,, | பகவதே | ,, |
| ,, | ஜயிநே | ,, |
| ,, | ரவயே | ,, |
| ,, | ஹரயே | ,, |
| ,, | பாஸ்கராய | ,, |
| ,, | ஸூர்யாய | ,, |
| ,, | கவயே | ,, |
| ,, | தீப்தமூர்த்தயே | ,, |
| ,, | நிகிலாகமவேத்யாய | ,, |
| ,, | நித்யாநந்தாய | ,, |

*

ஸ்ரீ:



ஆசிரியை: ஸ்ரீமதி. ஹா. கி. வாலம் பி. ஏ.,

(திருச்சி காலஞ்சென்ற தியாகி

என் ஹாலாஸ்யம் அவர்களின் அருமைப்புத்திரி)

# பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 26 | நூமணிக் | தூமணிக் |
| | 39 | அலர் | அவிர் |
| 9 | 69 | வருக! | வணக்கம்! |
| 11 | 131 | பரித்தான் | பூரித்தான் |
| 12 | 8 | சுலோகம் | சர்க்கம் |
| 19 | தலைப்பில் | நவக்ரஹக | நவக்ரஹக் |
| | 9 | இணைபடி | இணையடி |
| 20 | 12 | மலரடிப் | அம்மலரடிப் |

17-வது வரியாக அடியிற் கண்டபடி சேர்த்து வாசிக்க:

" பொன்னே! கிளியே! பூரணி துரந்தரி!

—(::)—

ஓம்

# உபநிடதம்



சூரியனே! பொன்மயமான வட்டிலால் சத்தியத்தின் முகம் மறைக்கப்பட்டுள்ளது. சத்தியத்தை நாடும் என்னுடைய பார்வைக்கு நீ அந்த மறைப்பை நீக்கியருள்வாயாக!

உலகை உயிர்ப்பித்துக் காப்பவனே! தனி வெளியில் சஞ்சரிப்பவனே! அனைத்தையும் அடக்கியாள்வோனே! சூரியனே! பிரம புத்திரனே! உன் கிரணங்களைச் சுருக்கி உன் ஒளியை உள்ளே வாங்கிக்கொள். உத்தமமான உனது மங்கள வடிவம் எதுவோ, அதை நான் பார்க்கும்படி அருள்வாய். இந்த (சூரிய மண்டலத்திலுறையும்) புருஷன் எவனோ, அவனே நான்.

—ஈசா. (15, 16)



ஓம்



# செங்கதிர்த் துதி

(திருமதி. ஹா. கி. வாலம் அவர்களின் "ஆதித்ய ஹ்ருதயத்தின்" தமிழ் மொழி பெயர்ப்பு)

### நிலைமண்டில ஆசிரியப்பா

எதிரில் நிற்கு மிராவணன் றன்னைச்
சதுரன் இராமன் கண்டுசிந் திக்கச்
சமரில் களைத்துச் சியாமளன் நிற்க
அமரில் களைத்து ஐயனும் நிற்க
அமரர்கள் குழுவுடன் அம்பரந் தன்னில்
அமல குணமுடை அகத்தியர் கண்டார்;
கமல முகமலர் கடுந்தவ முனிவர்
விமலனை விளித்து விளம்பல் மேவினர்:
" இரகுபதி இராமா! என்சொற் கேளாய்:
வெருவிரை வினில்நீ அடைவாய் வெற்றி!

இரகசியம் மறைஒன்று சொல்லக் கேளாய் :
விரைவில் வெல்வாய் எதிரிகள் தம்மை
செங்கதிர் இதயம் செல்வந் தருவது
மங்களம் ஆனது மாண்பு நிறைந்தது
சங்கை ஒழிப்பது சமரில் ஜயிப்பது
எங்கும் சொலிப்பது இன்ப மளிப்பது
துன்பம் துடைப்பது துயரம் அழிப்பது
அன்பு தழைப்பது ஆற்றல் அளிப்பது
பாவம் ஒழிப்பது பரகதி தருவது
நாவுக் கினியது நல்லன அருள்வது
கவலை யழிப்பது கடுந்துயர் தீர்ப்பது
தவப்பயன் ஆவது தண்ணளி பொழிவது
ஆயுள் அளிப்பது அவலம் ஒழிப்பது
நீயிதைக் கேட்பாய்: நிச்சயம் வெல்வாய்.
கதிரவன் உதயன் கண்கவர் ஒளியன்
துதிசெயப் படுவோன் ஞாமணிக் கதிரோன்
ஒளிக்கதிர் மாலை உடையவன் இறைவன்
அளிநிற இராமா! அவனைத் துதிப்பாய்!
அவனே எல்லாத் தேவரும் ஆவான்
அவன்பல மிகுந்தோன் அளவில் வலியோன்
அவன்சுரர் அசுரரைக் காப்பான் கதிரால்
பிரமன் திருமால் பிஞ்ஞகன் அவனே;
முருகன்ப்ர ஜாபதி இந்திரன் அவனே;
காலனும் யமனும் சோமனும் அவனே;
நீல நெடுங்கடற் கதிபதி அவனே;
பித்ருகள் வசுக்கள் சாதியர் அசுவினிகள்
மருத்துகள் மநுக்கள் காற்றுவெங் கனலே
உயிரினத் துயிரே பருவம்செய் புனலே
அலர்ஒளிக் கடலே ஆதித்தன் அவனே;

யாவும் விளக்கும் ஸவிதா சூரியன்;
மேவு விண்பதி கதிர்பதி சுடர்பதி
பசும்பொன் மேனியன் பானு திவாகரன்
பசும்பொன் கடலோன் பால்ஒளி வண்ணன்
பச்சைக் குதிரையன் ஆயிரம் கரத்தோன்
இச்சைகொள் ஏழு வண்ணக் குதிரையன்
ஒளிமய மேனியன் உறும்இருள் அழிப்போன்
ஒளிமயப் பரசிவன் துவஷ்டாமார்த் தாண்டன்
கிரண மாலையன் கிளர்ஒளி வண்ணன்
இரணிய கர்ப்பன் இருங்குளிர் செய்வோன்
அக்கினிக் கருவோன் அதிதியின் புதல்வன்
சொக்கிடு சங்கன் சூழ்குளிர் அழிப்போன்
அண்ட வெளிக்கடற் கரசன் சரசன்
மண்டிடும் இருள்ஒழி மண்டலக் கதிரன்
ருக்யஜுர் ஸாம மறைக்கடல் கடந்தோன்
திக்கு மறைந்திடப் பொழிபெரு மழையே
மித்திரன் விந்திய மலைமுக டடைவோன்
அத்தனை அண்டமும் அரைநொடி கடப்போன்
எரிப்பவன் அழிப்பவன், சுடுபவன் அவனே;
திருக்கிளர் பிங்களன் பொசுக்குமங் களனே;
கவிமணி உலகுயிர் உக்கிர ஒளியோன்
புவிமகிழ் செம்மணி பிறப்புக் கிருப்பிடம்
விண்மின் சுடர்கள் நாள்கள் கோள்கள்
ஒண்சுடர் அனைத்துக்கும் உயர்பதி அவனே;
ஒளிகளுக் கொளியே உம்பர்கள் பதியே
களிதரு கதிரவ பன்னிரு பெயரோய்!
களிர்குளிர் மழைகதிர் இடிமினல் புயலே!
ஒளிஎனத் திகழ்ந்திடும் உனக்கு வணக்கம்!

உதய கிரிஎனும் கிழக்கே வணக்கம்!
அதுஅஸ்த மனம்என் மேற்கே வருக!
சோதிப் பதியே சுடர்ஒளி வணக்கம்!
மாதிக் கினில்வளர் பகலவ வணக்கம்!
வெற்றிச் சுடரே விண்மணி வணக்கம்!
சுற்றிச் சுடர்படர் சூரிய வணக்கம்!
பச்சைக் குதிரைப் பதியே வணக்கம்!
மெச்சா யிரங்கதிர் விரிசுடர் வணக்கம்!
ஆதித்த அம்பர நவமணி வணக்கம்!
சோதிப் பரம்பர சுடர்மணி வணக்கம்!
உக்ரனே வீரனே உனக்கு வணக்கம்!
சக்கர சார்ங்கக் கையனே வணக்கம்!
தாமரை மலர்த்தும் தனிச்சுடர் வணக்கம்!
ஓம்எனும் பொருளே ஒண்சுடர் வணக்கம்!
மூன்றுமூர்த் திகளும் ஆனவ வணக்கம்!
தோன்றுசூ ரியனே சோதியே வணக்கம்!
விளங்குநல் ஒளியே வித்தக வணக்கம்!
துலங்குமெய் ஒளியே தூயவ வணக்கம்!
எல்லாம் விழுங்கும் எரிஇறை வணக்கம்!
பொல்லாக் கொடுங்கடுங் கோலத்தாய் வணக்கம்!
இருளழி பனியழி இறைவா வணக்கம்!
வரும்பெரு வைரியழி பரமா வணக்கம்!
ஒருவரும் ஒப்பிலி உயர்விலி வணக்கம்!
செருவினில் சுடர்வெற்றி வாகைய வணக்கம்!
செய்நன்றி யழிப்பவர் அழிப்பவ வணக்கம்!
மெய்ஒன்று மேனிய விரிஒளி வணக்கம்!
சோதிப் பெருஞ்சுடர்ச் சூரிய வணக்கம்!
ஆதிப் பரஞ்சுடர் ஐயனே வணக்கம்!

உருக்கிய செம்பொற் கதிரவ வணக்கம் !
தருக்கழி நெருப்பே தலைவா வணக்கம் !
உலகச் செயல்எலாம் உன்செயல் வணக்கம் !
விலக்குவை இருட்கடல் விறல்ஒளி வணக்கம் !
உலக சாட்சியே உனக்கு வணக்கம் !
தலைவ ஞாயிறே இரவியே வணக்கம் !
அழிப்பான் காப்பான் அகில உயிர்எலாம்
ஒழிப்பான் படைப்பான் உலகத் துயிரெலாம்
அருள்வான் மழையைப் பொழிவான் எரிப்பான்;
இருள்,மருள், குளிர்,பனி இமையில் ஒழிப்பான்;
அவன்தூங் கையிலே உலகுயிர் விழிக்கும்;
அவன்கண் விழித்தால் அனைத்துயிர் அழியும்;
அக்கினி ஓம்பும் அரும்பயன் அவனே;
திக்குகள் ஒளிரும் தீப்பயன் அவனே;
அருமறை நான்கும் வேள்வியும் அவனே;
அரும்பெரு வேள்வியின் பயனும் அவனே;
உலகச் செயல்எலாம் அவனே அவனே;
நிலையா உலகில் நிலைப்பவன் அவனே;
தொலையாப் பிறவிகள் தொலைப்பவன் அவனே;
கலைகதிர்க் கடவுளாய் நிற்பவன் அவனே;
ஆபத்து, விபத்தோ டருந்துயர் இன்னல்
மேவிடு துக்கம், பயம்வழி தவறல்
ஆகிய நிலைகளில் அருக்கனை நினைந்தால்
போய்விடும் துயரம்; பொங்கிடும் நன்மை.
இராகவ ! நீயும் இரவியைப் பூசி;
ஏகனே ! நீயும் இவன்கழல் நேசி;
மும்முறை ஜபிப்பின் முயல்வாய் யுத்தம்
இம்முறை இராகவ ! வெல்வாய் சத்தியம் !

இராவணன் உயிரைக் குடிப்பாய் நொடியில்
இராமனே! விஜயம் அடைவாய் படியில்;
எனுமுரை கேட்டுக் குலமணி இராமன்
தினமணி இதயம் துதித்தான் நேரில்;
உறுதியும் ஊக்கமும் உத்தமன் கொண்டான்;
கருதிச்செங் கதிர்அருள் காகுத்தன் நின்றான்;
ஆதித்த இதயம் ஐயன் ஜபித்தான்;
போதித்த அகத்தியன் பரித்தான் உள்ளம்;
செங்கதிர் நோக்கி அங்கவன் நின்றான்;
புங்கவன் துதிசெய்து புளகிதம் ஆனான்;
மும்முறை முதல்வன் அங்கைநீர் குடித்துத்
தன்னுடைத் தனுவைத் தடக்கையால் [எடுத்தான்;
பத்துத் தலையனைப் பார்த்து மகிழ்ந்தான்;
அத்தன் அவன்வதம் யத்தனம் புரிந்தான்.

## வஞ்சி விருத்தம்

கண்டான் இரவியும் ககனத்தில்
கொண்டான் மகிழ்ச்சி உள்ளத்தில்
கொண்டல் நிறத்தான் பூசிக்க
அண்டச் சூரியன் ஆசித்தான்.

இராவணன் உயிர்போகும்வேளை
பராவுறு ஞாயிறு பண்புடனே
“இராமா, தாமதம் ஏன்?” என்றான்
இராமனும் வென்றான் இராக்கதனை.

முற்றும்.

**(வான்மீகி ராமாயணத்தில் – யுத்த காண்டத்தில்
நூற்று ஏழாவது சர்க்கம் ஆதித்ய ஹ்ருதயம்.)**

ஓம்

காஞ்சீபுரம் உபய வேதாந்த மகா வித்துவான்
ஸ்ரீ ஜகதாசாரிய ஸிம்ஹாஸநாதிபதி
ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம்
# அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள்
இயற்றிய

வான்மிக ராமாயண வசனம்—யுத்தகாண்டம் 107-வது சுலோகம் — அகஸ்தியர் ராமனுக்கு 'ஆதித்திய ஹிருதயம்' உபதேம்;

---

இராம – இராவண யுத்தத்தைப் பார்க்கும் பொருட்டுத் தேவதைகளோடு கூடவந்திருந்த அகஸ்திய முனிவர் இராமனையணுகி, "இராமா! இதோ உனக்கு ஆதித்திய ஹிருதய மென்னும் ஸ்தோத்திரத்தை உபதேசிக்கிறேன். குழந்தாய்! இதைக்கொண்டு நீ யுத்தத்தில் சமஸ்த சத்துருக்களையும் ஜயிப்பாய். இது எப்படிப்பட்டவர்க்கும் புண்ணியத்தை வளரச் செய்வது; சகல பகைவர்களையும் நாசஞ் செய்வது; வெற்றியை விளைவிப்பது; அழிவில்லாத பயனைக் கொடுப்பதுமன்றி, எல்லா நன்மைகளுக்கும் சாதனமாய் இருப்பது. மனோ வியாதிகளையும் தேக வியாதிகளையும் தொலைத்து ஆயுளை மேன்மேலும் வளரச் செய்ய வல்லதான இந்தத் தோத்திரத்தைக் கேட்பாயாக. சுவர்ணத்தைப் போலச் சிவந்த கிரணங்களையுடையவனும், தேவா

சுரர்களால் நமஸ்கரிப்பட்டவனும் சிறந்த தேஜஸ்ஸை யுடையவனும், சந்திர சூரியர்களுக்கும் ஒளியைக் கொடுப்பவனும், எல்லா உயிர்களுக்கும் ரக்ஷகனு மான பரம புருஷனை இம்மகா ஸ்தோத்திரத்தினல் பூஜித்து, சந்தோஷப்படுத்துவாயாக. ஏனெனில், சூரிய மண்டலத்தினிடையில் இருக்கின்ற இப் புருஷன் எல்லாத் தேவதைகளுக்கும் ஆத்துமாவாய் இருப்பவன். எல்லா உலகங்களையும் காப்பாற்று பவன். இவன் எல்லா உலகங்களையும் சரீரமாக வுடைய பரமாத்துமாவாகையால் இவனே பிரமன், விஷ்ணு, சிவன், குமரன், பிரஜாபதிகள், இந்திரன், குபேரன், யமன், சந்திரன், வருணன், பிதிர் தேவதை கள், அஷ்டவசுக்கள், வாயு, அக்கினி முதலியவர் களுக்கும் மற்றுமுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் பிராணவாயுவும் வஸந்தாதி ருதுக்களை உண்டு பண்ணும் பிரபாகரனுமாவான்.

'நீ அதிதிக்குப் பிள்ளையாய்ப் பிறந்த சகல ஜகத்துக்கும் ரக்ஷகனுன பிரபு. உலகத்தையெல்லாம் படைப்பவன்; ஜனங்களைச் செயல்களில் தூண்டுபவன்; உலகத்திலுள்ள அசையும் பொருள்களுக்கும் அசையாத பொருள்களுக்கும் அந்தராத்துமாவாக இருப்பவன்; உலகின் உபகாரத்திற்காகச் சூரியனுகி வெளிச்சங்கொடுத்துக்கொண்டு ஆகாயத்தில் உலாவு கின்றனை. நீ மழை பெய்து லோகங்களையெல்லாம் போஷிப்பவன்; சிறந்த கிரணங்களையும் பொன் போன்ற நிறத்தையும் சுவர்ணமயமான ரேதஸ்ஸையு முடையவன்; பகலில் பிராணிகளின் சேஷ்டையை நடத்துபவன்; பச்சைக் குதிரைகளமைந்தவன்; ஆயிரங் கிரணங்களையுடையவன்; ஏழுகுதிரைகளை

யுடையவன்; மிகுந்த பிரகாசத்தினால் இருளை நீக்கிச் சுகத்தை விளைப்பவன்; படைத்தல், காத்தல், அழித்தல் இம்மூன்றையும் நீயே செய்பவன்; பிராணி களிடத்தில் இரக்கமுடையவன்; சங்காரத்தில் விளைகிற துக்கங்களினால் வருந்துபவர்களுக்குக் குளிர்ந்து இளைப்பாறுமிடமாய் இருப்பவன்; அவர்கள் விரோதிகளைத்தொலைத்து க்ஷேமத்தை உண்டுபண்ணு பவன்; இங்ஙனம் சிறந்த உபகாரம் செய்பவனாதலால் அனைவராலும் புகழப்படும் தன்மையன்; பகலில் அக்கினியை உள்ளே உடையவன்; அதிதியின் பிள்ளை யாய்ப் பிறந்தவன்; சாயங்காலத்தில் அஸ்தமிக்கும் தன்மையன்; பனியைப் போக்குபவன்; நீ ஆகாயத் திற்கு நாயகன்; (பரமாகாசமெனப்படுகிற பரமபதத் வற்கு நாதன்) நான்கு வேதங்களின் கரையறிந்தவன்; ஆகாயமார்க்கத்தில் மிகுந்த வேகமாகச் செல்பவன்; தக்ஷிணாயனத்தில் விந்தியம் வழியாகச் சஞ்சரிப்பவன்; வெயில் காயுந்தன்மையன்; உதிக்கும் பொழுது பொன்னிறமுடையவன்; நடுப்பகலில் அனைவரையும் தபிக்கச் செய்பவன்; வியாகரணம் முதலிய சகல சாஸ்திரங்களையும் நடப்பித்தவன்; அனைவரும் சம்சாரத்தை அனுபவிப்பதற்குக் காரணமாய் இருப்ப தின்; நக்ஷத்திரங்கள், கிரகங்கள், தாரகைகள் இவற் றிற்கு அதிபதி; நீ உலகத்தையெல்லாம் நிலைநிறுத்தும் தன்மையன்; நீ அக்கினி முதலிய ஒளிகளைக் காட்டி லும் சிறந்த ஒளியுடையவன்; நீ பன்னிரு மூர்த்திகளையுடையவன்.

"இப்படிப்பட்ட உனக்கு வணக்கம்! உதயகிரியி லுள்ள உனக்கு வணக்கம்! அஸ்தமய பர்வதத்தைச் சேர்ந்த உனக்கு வணக்கம்! சோதி மயமான பதார்க்

தங்களுக்கும் பகலுக்கும் அதிபதியான உனக்கு வணக்கம்! வெற்றியையும் க்ஷேமத்தையும் விளைவிப்பவனான உனக்கு வணக்கம்! பச்சைக் குதிரைகளையும், ஆயிரம் கிரணங்களையுமுடைய ஆதித்தனுக்கு வணக்கம்! தன்னைப் பற்றாதவர்களுக்கு பயங்கரமாய் இருக்கிற உனக்கு வணக்கம்! பிராணிகளைப் பலவாறு தூண்டுகிற உனக்கு வணக்கம்! நிகரில்லாத வேகமுடைய உனக்கு அடிக்கடி வணக்கம்! தாமரை மலர்களை மலரச் செய்யுமுனக்கு வணக்கம்! படைத்தல், காத்தல், அழித்தல் இவற்றைச் செய்பவரான பிரமன், விஷ்ணு, சிவன் இவர்களுக்குப் பிரபுவான உனக்கு வணக்கம்! பிரமருத்திரர்களை எப்படிப்பட்ட ஆபத்திலும் கைவிடாமல் பாதுகாத்து வருகிற உனக்கு வணக்கம்! ஆதித்தியன் எனப்படுகிற சூரியனுகிற தேஜஸ்ஸை நியமிக்கிற உனக்கு வணக்கம்! தன்னைப்பற்றினருடைய பகைவர்களை அழிக்க வல்ல உனக்கு வணக்கம்! அளவிடமுடியாத சொருபத்தையுடைய உனக்கு வணக்கம்! ஜீவன்களைப்போல் புண்ணிய பாபங்களுக்குத் தகுந்தபடி சுகதுக்கங்கள் அனுபவிப்பதின்றி எப்பொழுதும் ஒளி குன்றாமல் விளங்கும் உனக்கு வணக்கம்! அக்கினியின் மூலமாய் யாகங்களில் ஹவிஸ்ஸைப் பெறுகிற உனக்கு வணக்கம்! தன்னைப்பற்றினருடைய அஞ்ஞானமாகிற அந்தகாரத்தைப் போக்குந்தன்மையுடைய உனக்கு வணக்கம்! ஜனங்கள் செய்கிற புண்ணிய பாப கருமங்களுக்கு சாக்ஷியாயிருக்கிற உனக்கு வணக்கம்!"

"இவனே மகா பிரளயத்தில் உலகத்தை நாசஞ் செய்பவன்; மீளவும் அதை உண்டாக்கிப் பாதுகாப்பவன். இவன் கிரணங்களால் உலரச்செய்து

மழையைப் பெய்து வெயிலைக் காய்ந்து சகல பிராணி களும் உறங்கும் போதும் அவற்றில் உள்ளுறைந்து நிலை நின்று விழித்துக்கொண்டிருப்பான். வேதங் களும் யாகங்களும் யாகங்களின் பயனும் இவனே. இராமா! எவ்விதக்கஷ்டங்கள் வந்தபோதிலும் எவன் இந்தத் தோத்திரத்தைச் சொல்வானே, அவன் கெடுதியில்லாமல் சுகம் பெறுவான். உன் மனத்தை நிலை நிறுத்தித் தேவதேவனும் ஜகந்நாதனுமான இந்தத் தேவனை இதனால் பூஜிப்பாயாக.

"இந்தத்தோத்திரத்தை மூன்று தரம் ஜபிப்பா யாயின் யுத்தங்களில் வெற்றி பெறுவாய். நீண்ட கைகளையுடையவனே! இக்கணமே நீ இராவணனைக் கொல்வாய்," என்றனர்.

இங்ஙனம் அகஸ்தியர் மொழிந்து, தாம் வந்த வழியே போயினர். அப்பொழுது இராமன் மிகவும் சந்தோஷமுற்றுப் பரிசுத்தமான மனத்துடன் ஆதித்திய ஹிருதய தோத்திரத்தை மூன்று தரம் ஜபித்து, ஆசமனஞ் செய்து, வீரியம் மிகப்பெற்று, வில்லை ஏந்தித் தீரனாய் யுத்தத்திற்கு நின்றனன். உடனே இராமனது தோத்திரத்தினால் சந்தோஷ மடைந்த ஆதித்தியன் ஆகாயத்திலுள்ள தேவக் கூட்டங்களிடையில் நின்று, "சீக்கிரம் இராவணனைக் கொல்வாயாக!" என்று இராமனுக்குச் சொல்லினன்.



ஓம்

# இதர துதிப் பாடல்கள்



# ஸ்ரீ ராமாவதாரம் (சூரியன்)

(தசாவதார ஸ்தோத்ரமும் நவக்ரஹ ப்ரீதியும்)

ஆருயிர்ப் பிராணிகள் அனைத்தும் நடுங்க
அண்டபிண் டங்கள் அனைத்தும் குலுங்கச்
சீருயிர் யாவும் பிரமித்து மயங்கச்
சீறிப் பாய்வட வைத்தீத் தயங்க
ஊழிக் காலத் தீயின் உக்கிரக்
கோர நெருப்பினை வாரிப் பொழியும்
கூரிய சீரிய நேரிய வாளிகள்
வாரிதி வரண்டிட வருணன் வணங்க
மாறிமா றிவிடும் வரிசிலை வேந்தே!

## செங்கதிர்த் துதி

யாரும் யாவரும் எந்த நிலையிலும்
சீருயர் தாமரைத் திருவடி யடைந்தால்
நேரில் அவர்துயர் நின்று துடைக்கும்
பாரில் அடியருக் கபய மளிக்கும்
ஆருயிர் அஞ்சன வண்ணஎம் இராமா!
ஆரும் இணையிலா அறவுரு இராமா!
தீரும் தீமைநெறி தெய்விக நாதா!
கோரும் வரம்தா கோமளப் பாதா!
சேரும் நன்னெறி சியாமள போதா!

..........................



ஓம்

# நவக்ரஹ கோலம்

## ஞாயிற்றுக்கிழமை (சூரிய பகவான்)




## ஸூரியபகவான்

செம்பருத் திப்பூப் போலச் சிவந்த
அம்புய மலர்த்தும் அங்கதிர்ச் சுடரே!
பொங்கொளி மின்மயச் செங்கதிர்ச் சுடரே!
தங்கொளி கதிர்மணித் தங்கச் சுடரே!
மங்கள பாஸ்கர! காசிபர் மகனே!
தங்கும் இருட்டழி ஞானமெய்க் கதிரே!
எங்கள் பகலவா! இதயச் சுடரே!
மங்கும் பாவமழி மாணிக்கச் சுடரே!
எங்கள் ஞாயிறே! இணையடி பணிந்தேன்!
தங்க ஞாயிறே! தளிரடி பணிந்தேன்!
பொங்கும் ஞாயிறே! பொன்னடி பணிந்தேன்!
கங்குல் அழிப்பவ கழலிணை பணிந்தேன்!
எங்கும் மங்களம் பொங்குக என்றே!

---

(பலன்: சகல காரிய சித்தி, யோக ஆகர்ஷணம்)

---

ஓம்



# அழகின் அலை
## (ஸௌந்தர்ய லகரி)

உன்னடித் தாமரை மலர்நின் றுதிர்ந்த
பொன்னடித் துகளில் ஓர்துகள் அம்மா!
தன்முடி யணிந்து தாமரை மறையவன்
இன்னம் புரிகிறான் இயற்கை விந்தைகள்!
உன்னிச் செய்கிறான் உலகுயிர்ப் படைப்புகள்!
சொன்ன மணிச்சுடர் ஆயிரம் முடிகளால்
மின்னி விளங்கும் மேலவன் மாலவன்
அன்னை அடித்துகள் அருமைச் சுமையால்
தன்னிக ரற்றுக் காக்கிறான் உயிர்கள்!
மின்னியல் ஆடையன் புரக்கிறான் உலகுகள்!
மின்னும் இளம்பிறை துன்னும் அவிர்சடை
மன்னவன் சங்கரன் மலரடிப் பொடியைத்
தன்னுடம் பினிலே திருநீ றெனவே
உன்னி உவந்து மகிழ்கிறான் என்றால்
என்னால் உன்புகழ் உரைக்கவும் இயலுமோ!
அன்னாய்! மின்னே! அந்தரி! சுந்தரி!

" பரிதியே பொருளே யாவிற்கு முதலே!
பொன்செய் பேரொளித் திரளே!
கருதி நின்னை வணங்கிட வந்தேன்!
கதிர்கொள் வாண்முகம் காட்டுதி சற்றே!
—பாரதியார்

-----------

ஓம் சூரியநாராயண நமோ.

சங்க வெளியீட்டு எண். 11

பார்வையிட்டவர்:
சிந்தாமணிப் புலவர் – மகா வித்துவான்,
மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்.

*

வேண்டுவோர் பெறுமிடம்:
P. G. நாதமுனி,
(தொகுத்தவர்,)
23, வைகுண்டபெருமாள் மாடவீதி,
காஞ்சீபுரம்.

பேணுமுனை அச்சகம், 225, காந்திரோடு, காஞ்சீபுரம்.